எம்பெருமானாகிய கண்ணன் அருள் வாழ வேண்டும். கலிகாலம் அழிந்து பூவுலகம் போற்றும் நன்மையாகிய தவம் பெருகட்டும். கண்ணனின் இனிய அருளை நாடும் நாடு, தன் கண்டங்கள் நீங்க நீண்ட புகழும் உயர்வும் பெறும்.

கண்ணனின் ஆட்சியில் எல்லாத் தீமையும் அழிந்து பூவுலகம் நன்மைகளைப் பெற்று நாடும் நாமும் நன்மை பெறலாம் என்பதனை உணர்த்துவதே இப்பாடலின் செய்தி.

# 6. கண்ணன் - என் சீடன்

(கண்ணனைத் தன் சீடனாக்கி கண்ணன் எம்பெருமானுக்கே பாரதி குருவாக நிற்பது போன்ற எண்ணத்தின் விளைவுகள்)

ஆசிரியப் பா

**கவிஞரின் கர்வமும் கண்ணனின் அறியாமையும்**

*யானே யாகி என்னலாற் பிறவாய்*
*யானும் அவையுமாய் இரண்டினும் வேறாய்*
*யாதோ பொருளாம் மாயக் கண்ணன்*
*என்னிலு மறிவினிற் குறைந்தவன் போலவும்,*
*என்னைத் துணைக்கொண் டென்னுடை முயற்சியால்*
*என்னடை பழகலால் என்மொழி கேட்டலால்*
*மேம்பா டெய்த வேண்டினோன் போலவும்,*
*யான்சொலுங் கவிதை என்மதி யளவை*
*இவற்றினைப் பெருமை யிலங்கின வென்று*
*கருதுவான் போலவும், கண்ணக் கள்வன்*
*சீடனா வந்தெனைச் சேர்ந்தனன்,*

ஒரு நிலையில் பார்த்தால் நான்தான் கண்ணன். மற்றொரு நிலையில் கண்ணன் என்னிலிருந்து வேறுபட்டவன் என்ற இரண்டு நிலைகளிலும் உள்ளதோடு, இந்நிலையினின்றும் மாறுபட்ட பொருளாகவும் உள்ளவன். ஆகவே அவன் மாயக் கண்ணன்.

அவன் என்னை விடவும் அறிவில் குறைந்தவன் போன்று நின்று என்னைத் துணையாகக் கொண்டு என்னுடைய

என் முயற்சியினாலும் என்னுடன் பழகுவதாலும் அறிவு வார்த்தைகளைக் கேட்பதனாலும் தானும் உயர்ந்த அறிவு பெற்றவனாகி விடலாம் என்று எண்ணுகின்றான் போலும்.

எனவே நான் சொல்லும் கவிதைகளில் என் அறிவினையும் என் பெருமையினையும் எடை போட்டுணர்ந்தவன் போல மாயங்கள் பல செய்யும் கள்வன் போன்றவனான கண்ணன் என்னிடம் சீடனாக வந்து சேர்ந்தான்.

## சீடனின் உள் நோக்கமும் அதனால் விளைந்த தொல்லைகளும்

*தெய்வமே!*
*பேதையேன் அவ்வலைப் பின்னலில் வீழ்ந்து*
*பட்டன தொல்லைப் பலபெரும் பாரதம்;*
*உளத்தினை வென்றிடேன்;- உலகினை வெல்லவும்*
*தானகஞ் சுடாதேன் பிறர்தமைத் தானெனும்*
*சிறுமையி னகற்றிச் சிவத்திலே நிறுத்தவும்*
*தன்னுளே தெளிவும் சலிப்பிலா மகிழ்ச்சியும்*
*உற்றிடேன் இந்தச் சகத்திலே யுள்ள*
*மாந்தர்க் குற்ற துயரெலா மாற்றி*
*இன்பத் திருத்தவும் எண்ணிய பிழைக்கெனைத்*
*தண்டனைப் புரிந்திடத் தானுளங் கொண்டு,*
*மாயக் கண்ணன் வலிந்தெனைச் சார்ந்து,*
*புகழ்ச்சிகள் கூறியும், புலமையை வியந்தும்,*
*பலவகை யால்அகப் பற்றுறச் செய்தான்;*
*வெறும்வாய் மெல்லுங் கிழவிக் கிஃதோர்*
*அவலாய் மூண்டது;-*

(கண்ணனுக்கே குருவாக இருக்க வேண்டும் என்ற உணர்வின் விளைவால் உண்மையில் தனக்குத் தொல்லைதான் ஏற்பட்டது என்பதனைக் கவிஞர்,) தெய்வமே! இந்த சூழ்ச்சியினை உணராது நான் அவனது மாய வலையில் சிக்கிப்பட்டத் தொல்லைகளைச் சொன்னால் அது பல பெரிய பாரதக் கதைகளைப் போல இருக்கும்.

என் உள்ளத்தினையும் வெல்ல இயலவில்லை. உலகினை வெல்ல இயலும் என்பதன் விளைவாக எழுந்ததான நான் என்னும் அகந்தையிலிருந்தும் என்னை விடுவித்து, நிலைத்தத் தன்மையதான சிவத்திலே என்னை இணைத்திடவும் முயன்றான். காரணம் இன்பம் ஒவ்வொருவரின் உள்ளத்திலேயே உள்ளது. அதனை உணராது இந்த உலகத்தில் உள்ள இன்பங்களில் மயங்கிக் கிடப்பதினின்றும் விடுவிக்கவும், என்னிடத்தில் வந்தான். இவை மட்டுமின்றி என்னைப் பற்றி உணராமல் இந்த உலகத்தில் உள்ள மக்களிடம் உள்ள பிழைகளை நீக்க முயன்றதற்கான தண்டனைகளைத் தந்திடவும் உள்ளத்தில் எண்ணியே அந்த மாயக் கண்ணன் தானே விரும்பி வந்து என்னிடம் சீடன் என்ற பெயரில் ஒட்டிக் கொண்டான்.



என்னைப் புகழ்ந்த படியும் என் கவிதை நயங்களைப் பாராட்டி வியந்தும் என்னைத் தற்பெருமையில் மூழ்கிடச் செய்தான். அதனால் கர்வம் மிகுந்தது எனக்குள். வெறும் வாயை மெல்லும் வயது முதிந்தவர்களுக்கு நான் தற்பெருமைக் கொண்டுத் தருக்கித் திரிவது அவல் கிடைத்தது போன்று ஆகிவிட்டது. நான் ஊர் வம்பில் மாட்டிக் கொண்டேன்.

## சீடனுக்குரிய இலக்கணம்

*யானுமங் கவனை*
*உயர்நிலைப் படுத்தலில் ஊக்கமிக் கவனாய்,*
*"இன்னது செய்திடேல், இவரொடு பழகேல்,*
*இவ்வகை மொழிந்திடேல், இனையன விரும்பேல்,*
*இன்னது கற்றிடேல் இன்னநூல் கற்பாய்*
*இன்னவ குறவுகொள், இன்னவை விரும்புவாய்"*
*எனப்பல தருமம் எடுத்தெடுத் தோதி,*
*ஒய்விலா தவனோ டுயிர்விட லானேன்.*

இதனை உணராத நானும் என் சீடனான கண்ணனின் அறியாமையைப் போக்கி அவனை உயர் நிலைக்குக் கொண்டு வர வேண்டும் என்ற உள்ளத்துடன், அவனிடம் பல அறிவுரைகளைச் சொன்னேன். யாருடன் பழகக் கூடாது, யாருடன் பேசக் கூடாது, எதற்கெல்லாம் ஆசைப்படக் கூடாது. எவற்றை எல்லாம் பேசக் கூடாது, எந்த நூல் களைப் படிக்க வேண்டும், எத்தன்மையான நூல்களைப் படிக்காமல் விட வேண்டும்.

யாருடன் பழக வேண்டும், எவற்றை மட்டும் விரும்ப வேண்டும் என்றுப் பல்வேறு விதமான நல்ல சிந்தனைகளையும் அவனுக்கு உணர்த்துவதாய் உபதேசம் செய்தேன்.

என்னுடைய சீடன் அறிவற்றவனாகவோ திறமையற்றவனாகவோ இருந்தால் எனக்குமல்லவா மானக் குறைவு. எனவே என் உயிர் போகுமளவிற்கு அவனுக்கு நல்லுபதேசங்களைச் செய்தேன்.

### எதிர்நிலையில் நின்ற சீடன்

கதையிலே கணவன் சொல்லினுக் கெல்லாம்
எதிர்செயும் மனைவிபோல், இவனுநான் காட்டு
நெறியினுக் கெல்லாம் நேரெதிர் நெறியே
நடப்பா னாயினன் நானிலத் தவர்தம்
மதிப்பையும் புகழுறு வாழ்வையும் புகழையும்
தெய்வமாக் கொண்ட சிறுமதி யுடையேன்,
கண்ணனாஞ் சீடன்யான் காட்டிய வழியெலாம்
விலகியே நடக்கும் விநோதமிங் கன்றியும்,
உலகினர் வெறுப்புறும் ஒழுக்கமத் தனையும்
தலையாக் கொண்டு சார்பெலாம் பழிச்சொலும்
இகழுமிக் கவனாய், என்மனம் வருந்த
நடந்திடல் கண்டேன்; நாட்பட நாட்படக்
கண்ணனுந் தனது கழிபடு நடையில்
மிஞ்சுவா னாகி, வீதியிற் பெரியோர்
கிழவிய ரெல்லாங் கிறுக்கனென் றிவனை
இகழ்ச்சியோ டிரக்கமுற் றேளனம் புரியும்
நிலையும் வந்திட்டான், நெஞ்சிலே யெனக்குத்
தோன்றிய வருத்தஞ் சொல்லிடப் படாது
முத்தனாக் கிடநான் முயன்றதோ ரிளைஞன்
பித்தனென் றுலகினர் பேசிய பேச்சென்
நெஞ்சினை யறுத்தது;

கதைகளில் புருஷன் சொல்வதை மனைவி கேட்காமல் அதற்கு எதிர் நிலையிலேயே செயல்படுவதனைப் போன்று கண்ணனாகிய சீடனும் நான் சொன்ன நீதிகளை எதனையும் ஏற்காது எதிரான முறையிலேயே செயல்பட ஆரம்பித்தான்.



உலகத்தவரின் நன் மதிப்பினையும் பலர் போற்றும் வாழ்க்கையினையும் புகழையும் கண்டு அவைகளையே தெய்வமாகக் கொண்டிருக்கக் கூடிய சிறிய புத்தியுடைய அறிவற்றவன் நான்.

என்னுடைய கண்ணனான சீடனோ நான் காட்டிய வழிகள் எதனையும் பின்பற்றாமல் தானே தன் வழியில் சென்றான். இத்தகைய எதிர்ப்பு நிலையை அவன் எனக்கு மட்டும் காட்டவில்லை. அனைவரும் வெறுக்கும் படியான தீய ஒழுக்கங்கள் அனைத்தையும் மேற்கொண்டான். இதனால் மற்றவர்களின் இழிவான பார்வையும் பழிச் சொல்லும் கேட்கும் நிலைக்கு அவன் தள்ளப்பட்டதனை எண்ணி நான் மிகவும் மனம் வருந்தினேன். அவனுடைய இந்தத் தீய குணங்கள் நாட்பட நாட்பட அதிகமாகிவிட்டது.

தெருவில் போவோர், வருவோர், அனுபவமும் வயதும் முதிர்ந்த பெரியோர்களான பாட்டன், பாட்டிகள் போன்றவர்களும் இவனைக் கிறுக்கன் என்று கேலி செய்யும் அளவிற்கு இவன் இழிந்த தன்மையுடையவனாகி விட்டான்.

இதனால் என் மனம் பட்ட வேதனைகளைச் சொல்லி முடியாது. அறிவில் முதிர்ந்த அறிஞன் என்று இவனை ஊரார் புகழ வேண்டும் என்று பாடுபட்ட நான் இன்று இவனை அவ்வூரார் 'பித்தன்' அறிவுநிலை திரிந்தவன் என்றுக் கூறுவதனைக் கேட்டு என் மனம் வாள் கொண்டு அறுக்கப்பட்டதனைப் போன்று மனக்காயம் அடைந்தேன்.

### சீடனைத் திருத்த மேற்கொண்ட முயற்சிகள்

நீதிகள் பலவும்
தந்திரம் பலவும் சாத்திரம் பலவும்
சொல்லிநான் கண்ணனைத் தொளைத்திட லாயினேன்.
தேவ நிலையிலே சேர்த்திடா விடினும்
மானுடந் தவறி மடிவுறா வண்ணம்,
கண்ணனை நானுங் காத்திட விரும்பித்
தீயெனக் கொதித்துச் சினமொழி யுரைத்தும்,
சிரித்துரை கூறியும் செள்ளென விழுந்தும்,
கேலிகள் பேசிக் கிளறியும், இன்னும்
எத்தனை வகையிலோ என்வழிக் கவனைக்
கொணர்த்திட முயன்றேன்;- கொள்பய னொன்றில்லை

மீண்டும் கண்ணனான சீடனைத் திருத்திட முயன்று அறிவின் விரிவாக அவனிடம் மிக நுட்பமானவைகளையும், ஓதப்பட்ட வேதங்களையும் சொல்லி, நீ உயர்ந்த நிலையில் தெய்வம் போன்ற பெருமையை அடையாவிடினும் மனித னாக வாவது வாழ வேண்டிய நிலையினை அவனுக்கு உணர்த்துவதற்காக அவனை நான் மாற்றிட முனைந்தேன்.

அவனிடம் நான் கடுமையான முறையில் கோபத்துடனும், சில நேரம் சிரித்தும், 'சுள்' என்று எரிந்து விழுந்தும், கேலியாகவும் பலவாறாக எடுத்துச் சொல்லி என் வழியில் சேர்த்திட முயன்றேன். ஆனால் அதனால் எந்தப் பயனும் ஏற்படவில்லை. அவனுடைய தீயப் பாதையினின்றும் திருந்தி நல்வழிக் கொண்டு விட நான் நினைத்த எண்ணம் வீணாக ஆயிற்று.

## முரட்டுத்தனம் மாறாத சீடன்

*கண்ணன் பித்தனாய்க் காட்டா ளாகி,*
*எவ்வகைத் தொழிலிலும் எண்ணமற் றவனாய்,*
*எவ்வகைப் பயனிலுங் கருத்திழந் தவனாய்,*
*குரங்காய்க் கரடியாய்க் கொம்புடைப் பிசாசாய்,*
*யாதோ பொருளாய், எங்ஙனோ நின்றான்.*

சீடனோ மனநிலை சரியில்லாதவன் போன்றும், மிகுந்த முரட்டுக் குணம் கொண்ட காட்டு வாசிகளைப் போன்றும், எந்தத் தொழிலிலும் விருப்பம் இல்லாதும், எதிலும்கவனம் செலுத்தாதும், குரங்கைப் போன்றும், கரடியைப் போன்றும், கொம்புகளையுடைய பிசாசுகளைப் போன்றும், எதனையோப் போன்றும், எங்கேயோ நின்றிருப்பான்.

## ஆசிரியரின் கோபமும் தீர்மானமும்

*இதனால்,*
*அகந்தையு மமதையும் ஆயிரம் புண்ணுற,*
*யான்கடுஞ் சினமுற்று 'எவ்வகை யானும்*
*கண்ணனை நேருறக் கண்டே தீர்ப்பேன்'*
*எனப்பெருந் தாப மெய்தினே னாகி,*
*'எவ்வா றேனும் இவனையோர் தொழிலில்*
*ஓரிடந் தன்னில் ஒருவழி வலிய*
*நிறுத்துவோ மாயன் நேருற நிற்பவன்*
*என்றுளத் தெண்ணி, இசைந்திடுஞ் சமயங்*
*காத்திருந் திட்டேன்,*

இதனால் எனக்குக் கோபம் அதிகரித்தது. அதனால் எனது அகங்காரமும் கர்வமும் என் உள்ளத்தை ஆயிரம் புண்களால் துளைப்பது போன்று சிதைவுண்டு வேதனைப் படுத்தின. அப்போதும் எப்படியாகிலும் அந்தக் கண்ணனை நேருக்கு நேராகச் சந்தித்துத் தீர்வது என்று எண்ணி அதற் காக ஏங்கிக் கிடந்தேன். மேலும் இவனை எப்படியாவது ஏதாவது ஒரு தொழிலில் எங்காவது கொண்டு சேர்த்து அதில் ஈடுபடச் செய்துவிட்டால் எல்லாம் சரியாகிவிடும் என்று எண்ணி அந்தச் சமயத்திற்காகவும் காத்துக் கொண்டிருந்தேன்.

## ஆசிரியரின் வேண்டுகோள்

*ஒருநாட் கண்ணனைத்*
*தனியே எனது வீட்டினிற் கொண்டு,*
*"மகனே, என்பால் வரம்பிலா நேசமும்*
*அன்புநீ யுடையை; அதனையான் நம்பி,*
*நின்னிட மொன்று கேட்பேன்; நீயது*
*செய்திடல் வேண்டும்; சேர்க்கையின் படியே*
*மாந்தர்தஞ் செயலெலாம் வகுப்புறல் கண்டாய்.*
*சாத்திர நாட்டமும், தருக்கமும், கவிதையில்*
*மெய்ப்பொரு ளாய்வதில் மிஞ்சிய விழைவும்*
*கொண்டோர் தமையே அருகினிற் கொண்டு,*
*பொருளினுக் கலையு நேரம் போக*
*மிஞ்சிய பொழுதெலாம் அவருடன் மேவி*
*இருந்திட லாகுமேல், எனக்குநன் றுண்டாம்;-*
*பொழுதெலாம் என்னுடன் போக்கிட விரும்பும்*
*அறிவுடை மகனிங் குனையலால் அறிந்திடேன்*
*ஆதலால்,*
*என்பயன் கருதி, எனக்கொரு துணையாய்*
*என்னுடன் சிலநாள் இருந்திட நின்னை*
*வேண்டிநிற் கின்றேன், வேண்டுதல் மறுத்தே*
*என்னைநீ துன்ப மெய்துவித் திடாமே,*
*இவ்வுரைக் கிணங்குவாய்" என்றேன்.*

அத்தகைய நல்ல வாய்ப்பும் கனிந்தது. ஒருநாள் கண்ணனை என் வீட்டிற்கு அழைத்து வந்தேன். அப்போது அவனிடம், மகனே, என்மீது அளவற்ற அன்பு கொண்டவனே! பாசம் கொண்டவனே! அந்த அன்பின் காரணமாக உன்னிடம் ஒன்று கேட்பேன். எனக்காக நீ அதனைச் செய்து தந்து அதன்படி நடக்க வேண்டும்.

மனிதர்கள் தங்கள் செயல் முறைகளுக்கு ஏற்பப் பல பிரிவுகளாக வாழ்கின்ற நிலைகளைப் பார்ப்பாயாக. சாத்திரங்களினைப் பயின்று அதில் உள்ள கருத்துகளில் வாதங்கள் செய்தும், நல்ல கவிதைகளில் ஆழ்ந்து அவற்றின் கருத்துக்களை ஆராய்ந்து அறிவதிலும் ஆர்வம் கொண்டவர்கள் எப்போதும் என்னைச் சுற்றி இருக்க வேண்டும். என்னுடைய தேவைக்கான பொருள் ஈட்ட வேண்டி, அதற்காக அலையும் வேலைநேரம் போக மற்ற நேரங்களில் நான் அவர்களுடன் சேர்ந்து இருந்திட வேண்டும்.

அப்படியிருத்தலே எனக்கு மிகவும் நன்மை தருவதாகும். அத்தகைய நல்ல துணையாக எப்போதும் என்னுடன் இருத்தல் என்பதான நிலையினை என்னைப் பொறுத்த வரையில் அறிவுடைய என் மகனான உன்னைத் தவிர வேறு யாரும் அத் தகுதியினைப் பெற முடியாது.

ஆகவே என்னுடைய நன்மைகளைக் கருதி என்னுடன் துணையாகச் சில நாட்கள் இருக்க வேண்டும் என்று உன்னை வேண்டிக் கேட்கின்றேன். இல்லையென்று என் உரையை மறுத்து என்னை நீ துன்பத்தில் ஆழ்த்தி விடாதே என்றுக் கெஞ்சினேன்.

## சீடன் உரைத்த மறுமொழி

கண்ணனும்,
"அங்ஙனே புரிவேன். ஆயினின் னிடத்தே.
தொழிலிலா தியாங்ஙனஞ் சோம்பலி விருப்பது?
காரிய மொன்று காட்டுவை யாயின்,
இருப்பேன்" என்றான்.

என் மனம் மகிழும் படியாக கண்ணனும் சரி யென்றுச் சொல்லி விட்டான். ஆனால் தொடர்ந்து, என்னால் சோம்பேறியாக உங்களிடத்தில் இருக்க முடியாது. நான் விரும்பிச் செய்யும் படியாக எனக்கு ஏதாகிலும் வேலை கொடுத்தால் நான் இங்கு இருப்பேன் என்றான்.

## ஆசிரியர் கொடுத்த பணியும் சீடனின் செயலும்

இவனுடை யியல்பையும்
திறனையுங் கருதி, "என் செய்யுளை யெல்லாம்
நல்லதோர் பிரதியில் நாடொறும் எழுதிக்
கொடுத்திடுந் தொழிலினைக் கொள்ளுதி" என்றேன்.
நன்றெனக் கூறியோர் நாழிகை யிருந்தான்;
"செல்வேன்" என்றான்; சினத்தோடு நானும்
பழங்கதை யெழுதிய பகுதியொன் றினையவன்
கையினிற் கொடுத்துக் "கவினுற இதனை
எழுதுக" என்றேன்; இணங்குவான் போன்றதை;
கையிலே கொண்டு கணப்பொழு திருந்தான்;
"செல்வேன்" என்றான்.

நானோ எழுதுவதை மட்டுமே தொழிலாகக் கொண்டவன். என்னால் இவனுக்கு என்ன தொழில் கொடுக்க முடியும்? என்று எண்ணினேன். இறுதியில், நான் எழுதுகிற கவிதைகளை தினமும் தெளிவாகப் படியெடுத்துக் கொடுக்கும் பணியினை அவனுக்குக் கொடுத்தேன்.

சரி என்று கூறினான். சிறிது நேரம் கழித்து 'நான் போகிறேன்' என்றான். நானோ கோபத்துடன் முன்பு எழுதி வைத்திருந்த பழைய கவிதைகளை எடுத்து அவனிடம் கொடுத்து, அழகாக இதனைப் பார்த்துத் தெளிவாக எழுதுக என்றேன். அவன் அதனை ஏற்றுக் கொண்டவன் போன்று அவற்றை வாங்கிக் கொண்டான். ஆனால் மீண்டும் சிறிது நேரம் கழித்து நான் போகிறேன் என்று கூறினான்.

## ஆசிரியரின் கோபமும் அதன் விளைவும்

சினந்தீ யாகிநான்,
"ஏதடா, சொன்னசொல் அழித்துரைக் கின்றாய்?
பித்தனென் றுன்னை உலகினர் சொல்வது
பிழையிலை போலும்" என்றேன், அதற்கு
"நாளைவந் திவ்வினை நடத்துவேன்" என்றான்.

இத்தொழி லிங்கே இப்பொழு தெடுத்துச்
செய்கின் றனையா? செய்குவ தில்லையா?
ஒருரை சொல்"என் றுறுமினேன். **கண்ணனும்**
"இல்லை"யென் றொருசொல் இமைக்குமுன் கூறினான்.
வெடுக்கெனச் சினத்தீ வெள்ளமாய்ப் பாய்ந்திடக்
கண்சிவந் திதழ்கள் துடித்திடக் கனன்றுநான்
"சீச்சீ, பேயே, சிறிதுபோழ் தேனும்
இனியென் முகத்தி னெதிர்நின் றிடாதே.
என்று மிவ்வுலகில் என்னிடத் தினிநீ
போந்திடல் வேண்டா, போபோ, போ"என்
றிடியுறச் சொன்னேன்;

எனக்குக் கோபம் அதிகமாகியது. ஏனடா, இப்போது தானே வேலை செய்கிறேன் என்று ஒப்புக் கொண்டாய். இப்போது நீயே அதனை மறுத்து எதிர்த்துரைக்கின்றாயா? உன்னை ஊர் மக்கள் மனநிலை சரியில்லாதவன் என்ற கூறுவது சரிதான் போலும் என்றேன். அதற்கு அவனோ நாளை வந்து இவ்வேலையினைச் செய்கின்றேன் என்று கூறிநின்றான்.

உன்னால் இப்போது இந்த வேலையைச் செய்ய முடியுமா? முடியாதா? ஒரு வார்த்தையில் பதில்சொல் என்று கோபத்துடன் கேட்டேன்.

அவன் சற்றும் சிந்தியாமல் ஒரு நொடியில், இல்லை என்னால் முடியாது என்று கூறினான். அதனைக் கேட்டவுடன் என்னுடைய கோபம் வெள்ளம் போல் பொங்கியது. அதனால் கண் சிவந்து இதழ்கள் துடித்திட நானே நெருப்பு போன்று மாறி கோபத்தின் உச்சியில் நின்று சீச்சி... பேயே... இனி ஒரு நிமிடமும் என் முன் நிற்காதே. என் முகத்தில் விழிக்காதே. இவ்வுலகம் உள்ளவரை என்னிடத்தில் வராதே போய் விடு... போ... போ... போ...! என்று இடியைப் போன்று ஓசையிட்டுக் கத்தினேன். கண்ணன் இதனைக் கேட்டவுடன் எழுந்து செல்ல ஆரம்பித்தான்.

### ஆசிரியரின் இறுதியுரை

கண்ணனும் எழுந்து
செல்குவ னாயினன். விழிநீர் சோர்ந்திட
"மகனே, போகுதி, வாழ்கநீ, நின்னைத்
தேவர் காத்திடுக! நின்றனைச் செம்மை
செய்திடக் கருத் ...
தோற்றுவிட் டேனடா! சூழ்ச்சிக ளறிந்தேன்
மறித்தினி வாராய், செல்லுதி, வாழிநீ!"
எனத்துயர் நீங்கி, அமைதியோ டிசைத்தேன்;

ஆனால் அவன் பிரிந்து செல்வதை என் மனம் தாங்காமல் கண்களில் நீர் வழிய கோபத்தை ஆற்றி அமைதியடைந்தபடி அமையதியாக, மகனே! நீ போகிறாயா? நீ வாழ் வாயாக! உன்னைக் கடவுளாவது காப்பாற்றட்டும்! உன்னைச் செம்மை செய்து நம் முறையில் வாழ வைக்க வேண்டும் என்று ஏதேதோ செய்தேன். ஆனால் அம் முயற்சியில் நான் தோற்று விட்டேன். என் சூழ்ச்சிகள் ஏதும் பயன் தரவில்லை. இனி மறந்தும் நீ நான் இருக்கும் பக்கம் வர வேண்டாம். சென்று நீ வாழ்வாயாக!' என்று அமைதியாகச் சொன்னேன்.

### சீடனான கண்ணனிடம் ஏற்பட்ட மாற்றமும் பதிலுரையும்

சென்றனன் கண்ணன் திரும்பியோர் கணத்தே
எங்கிருந் தோநல் லெழுதுகோல் கொணர்ந்தான்;
காட்டிய பகுதியைக் கவினுற வரைந்தான்.
"ஐயனே, நின்வழி யனைத்தையுங் கொள்வேன்.
தொழில்பல புரிவேன். துன்பமிங் கென்றும்,
இனிநினக் கென்னால் எய்திடா" தெனப்பல
நல்லசொல் லுரைத்து நகைத்தனன் மறைந்தான்.

கண்ணன் சென்று விட்டான். ஆனால் அடுத்த நிமிடம் எங்கிருந்தோ ஒரு எழுது கோலுடன் என்னிடம் மீண்டும் வந்தான். அவனுக்காக நான் கொடுத்த வேலையை அழகாகச் செய்ய ஆரம்பித்தான். பின்னர், ஐயா, இனி நீங்கள் சொல்லும் அனைத்தையும் கேட்பேன். எந்த வேலைகளைச் சொன்னாலும் செய்திடுவேன். இனி என்னால் எந்தத் துன்பமும் உங்களுக்கு ஏற்படாது' என்றும், இன்னும் பல நல்ல வார்த்தைகளைச் சொல்லி சிரித்தபடி மறைந்து விட்டான்.

### என்னால் எல்லாம் முடியும் என்ற ஆசிரியரின் அகந்தை அழிந்தது

மறைந்ததோர் கண்ணன் மறுகணத் தென்றன:
நெஞ்சிலே தோன்றி நிகழ்த்துவா னாயினன்:
"மகனே, ஒன்றை யாக்குதல் மாற்றுதல்

*அழித்திட லெல்லாம் உரைத்திடும் பொழுதிலே*
*வென்றாய்; உலகினில் வேண்டிய தொழிலெலாம்*
*ஆசையுந் தாபமும் அகற்றியே புரிந்து*
*வாழ்கநீ" என்றான். வாழ்க மற்றவனே!*

என் தன் கண்களுக்கு வெளிப்புறமாகத் தெரியாத படி மறைந்த ஆனால் மறு நிமிடம் என் இதயத்தில் தோன்றி நின்றுப் பேச ஆரம்பித்தான் சீடனாகிய கண்ணன்.

'மகனே' ஒன்றை ஆக்குவதும், மாற்றுவதும், அழிப்பதும் எல்லாம் உன் வேலை அல்ல என்பதனை உணர்வாயாக. என்னால் உன்னை எதுவும் செய்ய முடியவில்லை என்று கூறிய போதுதான் நீ வெற்றி பெற்றாய், இனி, ஆசை கோபங்களை அகற்றி உனக்கு விருப்பமான தொழிலினைச் செய்து வாழ்வாயாக? என்று வாழ்த்தியவனும் வாழ வேண்டும்.

(கண்ணன் சீடனாக வந்ததனால் எந்தச் செயலையும் என்னால் செய்ய முடியும் என்ற அகந்தை அழிந்த நன்மை பெற்றேன். தனித்திறன் படைத்தவர்களிடத்தில் எப்போதும் சிறிதேனும் கர்வமும் கூட இருக்கும். இக்கர்வத்தின் காரணமாக எல்லாம் உணர்ந்த பாரதியே, எல்லாமான இறைவனையேத் தனக்குச் சீடனாக எண்ணிப்பார்த்து மகிழ்கின்றார். ஒரு புறம் இது கற்பனை என்றாலும் மற்றொருபுறம் இது கர்வத்தின் வெளிப்பாடு. ஆகவே கண்ணன் அதனை அழித்தான் என்பது உணர்த்தப்படுகின்றது.)

## 7. கண்ணன் - எனது சற்குரு

புன்னாகவராளி - திஸ்ரஜாதி - ஏகதாளம் ரஸங்கள்: அற்புதம், பக்தி

(கண்ணனை குருவாகப் பார்த்தல்)

### சாத்திரங்களின் உண்மைநிலை

*சாத்தி ரங்கள் பல தேடினேன் - அங்குச்*
*சங்கையில் லாதன சங்கையாம் - பழங்*
*கோத்தி ரங்கள் சொல்லு மூடர்தம் - பொய்மைக்*
*கூடையி லுண்மை கிடைக்குமோ? நெஞ்சில்*
*மாத்திர மெந்த வகையிலும் - சக*